11th February 1958]

SRI S. LAZAR : இது போன்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருந்தும்கூட இதற்காக ஒதுக்கப்பட்ட தொகை கடன் கொடுக்கப் படாமல் சர்க்காரிடமே இருந்து வருவது சர்க்காருக்குத் தெரியுமா ? அதிலும் சமுதாய நலத் திட்டம் பகுதிகளிலே கடன்கள் வினியோகிக்கப் படாமல் இருக்கின்றன என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? ஆகவே, மேலும் ஏதாவது சீர்திருத்தம் கொண்டு வருவதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சர்க்கார் பணமும் மற்ற தனிப்பட்டவர்கள் பணம் போலத்தான். சர்க்காரும் தங்கள் பணத்தைக் காப்பாற்றவேண்டும். ஆதலால் ஒரளவுக்கு ஏதாவது தகுந்த நிலம் இருந்தால்தான் கடன் கொடுக்கலாமே தவிர, பணத்தை வாரி இறைத்துவிட முடியாது.

MR. SPEAKER : கேள்விகள் 43, 50-ஏ இரண்டையும் சேர்த்து எடுத்துக்கொள்ளப்படும்.

*Bauxite.*

* 43 *Q.*—SRI M. P. SUBRAMANIAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have received any report from the U.S.A. about samples of Bauxite ore sent for testing; and

(*b*) if so, whether a copy of it will be placed on the Table of the House?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Aluminium plant at Mettur.*

* 50-A *Q.*—SRI M. P. SUBRAMANIAM, SRI K. SATTANATHA KARAYALAR AND SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Industries be pleased to state with reference to answer given to question No. 104 on 7th November 1957, the present state of the proposal to set up an aluminium plant at Mettur in Salem district?

THE HON. SRI R. VENKATARAMAN : Arrangements are being made by the Government of India to make an accurate assessment of the quality and quantity of bauxite deposits in the Shevaroys area, as a preliminary step, to the establishment of the aluminium smelter.

SRI M. P. SUBRAMANIAM : ரூ. 24 கோடி செலவில் ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் அலுமினியம் தொழிற்சாலை ஆரம்பிப்பதற்கு மத்திய சர்க்கார் ஒப்புக்கொண்டதாக பத்திரிகையில் வந்த செய்தி உண்மைதானு ? அதற்கு ஏதாவது ஆதாரம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படி ஒன்றும் தீர்மானிக் கப்படவில்லை.

SRI A. GOVINDASAMY: இந்த அலுமினியம் தொழிற்சாலையை துவக்குவதற்கு ரஷ்ய சர்க்கார் நமக்கு ஏதாவது உதவி தருவதாக வாக்கு அளித்திருக்கிறார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இல்லை.

[11th February 1958

**Sri M. P. SUBRAMANIAM**: சேலம் மாவட்டத்தில் அலுமினியம் தொழிற்சாலைகள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் ஆரம்பிக்கப்படும் என்பதற்கு ஆதார பூர்வமான நம்பிக்கை தெரிவிக்க முடியுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: நான் இது பற்றி சில விவரங்கள் கூற விரும்புகிறேன். முதல் முதலாக அமெரிக்கா தேசத்திலிருந்து இரண்டு நிபுணர்கள் வந்தார்கள். அவர்கள் சேர்வராய் பிரதேசத்தில் இருக்கக்கூடிய பாக்சைட்டை பரிசீலனை செய்தார்கள். 1957-ல் அக்டோபரில் ஸாபோ என்ற பிரஞ்சு நிபுணர் ஒருவர் வந்தார். அவர் பார்த்து விட்டு இங்கு 40 அல்லது 50 லட்சம் டன் பாக்சைட் கிடைக்கும் என்று அபிப்பிராயம் கூறியிருக்கிறார். ஆனால் அவர் பிரான்ஸ் சென்றவுடன் தன்னுடைய உறுதியான அபிப்பிராயத்தைக் கூறுவதாக சொல்லியிருக்கிறார். இந்த நிலையில் முதலிலே சர்க்கார் "இண்டஸ்டிரியல் டெவலப்மெண்டு கார்ப்பரேஷன்" மூலமாக இதை எடுத்து நடத்துவதாக உத்தேசித்து இருந்தார்கள். ஆனால் தனியார் துறையில் பலர் இப்பொழுது வெளி நாடுகளில் பேச்சு வார்த்தைகள் நடத்திக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் வெற்றி அடைந்தால், அவர்கள் மூலமாகவும் இதை நடத்தலாம் என்பதும் யோசனையில் இருக்கிறது.

**Sri M. P. SUBRAMANIAM**: அமைச்சர் அவர்கள் கூறிய பதிலில் இருந்து இதுபற்றி என்ன செய்ய முடியும் என்பது ஆராய்ச்சியில் இருக்கும்பொழுது, திட்டத்தை எடுத்துக்கொள்வது தனியார் துறையிலா, அரசாங்கத் துறையிலா என்று எப்படி நிர்ணயமாயிருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN**: தனியார் துறையிலே சிலர் வெளி நாட்டில் இருக்கிற மூலதனம் போடக்கூடியவர்களோடும் இயந்திரம் கொடுக்கக்கூடியவர்களுடனும் சேர்ந்து இதை அமைக்கலாமா என்பது பற்றி பேச்சு வார்த்தை நடத்திக்கொண்டிருக்கிறார்கள். "நேசர் ஆப் இண்டஸ்ட்ரி" அலுமினியம் உற்பத்தி செய்வதுதான் இது பற்றி எந்த விதமான அபிப்பிராயப் பேதமும் இல்லை. நமக்கு என்ன மூல கனிப் பொருள்கள் இருக்கின்றன, அதை எப்படி நடத்துவது, 10,000 தொழிலாக அமைப்பதா அல்லது 20,000 தொழிலாக அமைப்பதா என்பதுதான் பரிசீலனையிலிருக்கிறது.

### *Suppression of Immoral Traffic Act*

* 44 *Q.*—**Sri N. K. PALANISAMI**: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of persons prosecuted under the provision of the Suppression of Immoral Traffic Act in the State during 1956 and 1957;

(*b*) the number of persons arrested in the Madras City during the same period; and

(*c*) how they are rehabilitated?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: (*a*) Six hundred and forty-one persons in 1956 and 678 persons in 1957.

(*b*) Two hundred and sixteen in 1956 and 207 in 1957.

(*c*) (i) Restoration to parents or guardians.

(ii) Giving them in marriage to suitable persons. A grant of Rs. 150 is paid to each such inmate as marriage grant.